## NOVEMBER/DECEMBER 20..

## 23PTA31 — சிற்றிலக்கியம்

Time : Three hours Maximum : 75 marks




பகுதி அ — ($10 \times 2 = 20$ மதிப்பெண்கள்)

அனைத்து வினாக்களுக்கும் ஓரிரு சொற்களில் விடையளி.

1. பரணி - பெயர்க்காரணம் தருக.

2. நான்முகன் எங்கு தோன்றினார்?

3. தமிழ்விடு தூது எந்த வெண்பாவால் ஆனது?

4. தூது இலக்கியத்தை வேறு எவ்வாறு அழைப்பர்?

5. குற்றாலக் குறவஞ்சிக் குறிப்பிடும் எட்டு மலைகளில் இரண்டினைக் குறிப்பிடுக.

6. பூமலி இதழி - பொருள் தருக.

7. முக்கூடல் எனப் பெயர் வரக் காரணம் என்ன?

8. மருதூர்ப் பள்ளி என்று அழைக்கப்படுபவள் யார்?

9. காவடிச் சிந்து - குறித்து வரைக.

10. பிள்ளைத்தமிழில் இடம்பெறும் பருவங்கள் எத்தனை? அவை யாவை?

ஆ — (5 × 5 = 25 மதிப்பெண்கள்)

ாக்களுக்கும் ஒரு பக்க அளவில் விடையளிக்க.

முதலாம் குலோத்துங்கச் சோழனின் வரலாற்றை எழுதுக.

(அல்லது)

(ஆ) கருணாகரத் தொண்டைமானின் சிறப்பினை விளக்குக.

12. (அ) தமிழ்விடு தூது கூறும் தமிழின் சிறப்புகளை விளக்கி எழுதுக.

(அல்லது)

(ஆ) திருநாவுக்கரசரின் கைலாயக் காட்சியினை விவரி.

13. (அ) குற்றால நாதரின் பவனி குறித்து எழுதுக.

(அல்லது)

(ஆ) குற்றாலக் குறவஞ்சிக் குறிப்பிடும் மூவர் வணக்கத்தை விளக்குக.

14. (அ) திருமாலின் சிறப்புகள் பற்றி முக்கூடற்பள்ளுக் கூறுவனவற்றை விளக்குக.

(அல்லது)

(ஆ) முக்கூடல் நகரின் சிறப்புகளை எழுதுக.

15. (அ) ஐயனின் புயவலிமையைக் குமரகுருபரர் எங்ஙனம் போற்றுகிறார்?

(அல்லது)

(ஆ) 'மூரிப்ப கட்டு வரிவாளை' எனத் தொடங்கும் பாடலின் கருத்துகளைப் பகழிக்கூத்தர் எங்ஙனம் விளக்குகிறார்?



பகுதி இ — (3 × 10 = 30 மதிப்பெண்கள்)

எவையேனும் மூன்று வினாக்களுக்குக் கட்டுரை வடிவில் விடையளிக்க.

16. நாரதர் கூறிய சோழ மன்னர்களின் ஆட்சி முறையினை விளக்குக.

17. தூது பெறும் தலைவன் சோமசுந்தரக் கடவுளைப் புகழ்ந்து கூறியுள்ள செய்திகளைப் புலப்படுத்துக.

18. வசந்தவல்லியின் அழகையும் பந்தாடும் திறத்தினையும் தொகுத்து எழுதுக.

19. உழவர்களின் வாழ்க்கையை முக்கூடற்பள்ளு விளக்கும் விதத்தைக் கட்டுரையாக்குக.

20. நிலவை முருகனோடு விளையாட வருமாறு அம்புலிப் பருவத்தில் பகழிக் கூத்தர் அழைக்கும் விதத்தைப் பாடலுடன் புலப்படுத்துக.

---